# பகவத் பாதை




Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

20-08-2013




அகத்தளவில் நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதை புரிந்து கொள்வதுதான் ஒருவருக்கு நிரந்தர தீர்வாக அமையும்.

- ஸ்ரீ பகவத்



## நித்திய அனுஷ்டானம்

- ஸ்ரீ பகவத்

இரயில் பயணத்தில் இருந்தேன். நான் பயணம் செய்த இருக்கையை ஒட்டி ஒரு இளம் வயதுப் பெண் தனது இரண்டு குழந்தைகளுடன் பயணம் செய்தார்.

பயணத்தின்போது அவ்வப்போது தொழுகையில் ஈடுபட்டுவந்தார். நோன்புக்காலம் ஆதலால் இரவுத் தொழுகைக்கு வசதியாக தனது படுக்கையையும் வாங்கிக் கொண்டார்.

ஒவ்வொரு மதத்திலும் இப்படிச் சில நித்திய அனுஷ்டானங்கள் வலியுறுத்தப்பட்டுள்ளன.

தியான அமைப்புக்களிலும் பலவிதமான தியானங்கள் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. அவற்றுள் கடைசியாக சகஜ தியானமும் வலியுறுத்தப்படுகிறது.

இராமகிருஷ்ண பரமஹம்சர் இப்படிக் கூறுவார் : "ஒரு பாத்திரத்தை ஒருமுறை விளக்கி சுத்தப்படுத்தி வைத்துவிட்டால் மட்டும் போதாது. நாம் அதனைப் பயன்படுத்தாவிட்டால் கூட அதில் தாமாகவே களிம்பு உருவாகிப் படிந்துவிடும். ஆகவே அதனைத் தினமும் கழுவிச் சுத்தமாக்குவது தான் நமது கடமை".

இப்படி எங்கு திரும்பினாலும் நித்திய அனுஷ்டானம் பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டு வருகிறது.

நித்திய அனுஷ்டானம் என்றால் என்ன?

அதைச் செய்வதன் நோக்கம் என்ன?

அதைச் செய்தால் என்ன கிடைக்கும்?

செய்யாவிட்டால் என்ன நிகழும்?

அனுஷ்டானங்கள் அனைத்தும் மனோலயமே.

நம்முடைய மனம் குவிந்த நிலையில் நமக்கு ஏற்படும் அனுபவங்களை மனோ லயம் என்று குறிப்பிடுகின்றோம்.

நமக்கு ஏதாவது ஓர் அனுபவம் ஏற்படுகின்றது எனில்,

- அது இன்ப அனுபவமாக இருந்தாலும் சரி அல்லது துன்ப அனுபவமாக இருந்தாலும் சரி,

அவை அனைத்தும் மனோ லயமே.

மனோலயம்தான் அனுபவம்; அனுபவந்தான் மனோலயம்.

நமது வாழ்க்கையையும், அனுபவங்களையும் பிரிக்கமுடியுமா?

நமது அனுபவங்களைத்தான் நாம் வாழ்க்கை என்று கூறுகிறோம். நமக்கு அனுபவங்களே ஏற்படாவிட்டால்,

நாம் நம்மை மறந்து தூங்கிவிட்டோம் என்றுதான் அர்த்தம்.

தூங்கும்போது கூட கனவின் வடிவத்தில் நமது அனுபவங்கள் நம்மைத் தொடர்ந்து வருகின்றன.

நாம் வாழ்ந்திடும் ஒவ்வொரு கணத்திலும் நாம் ஏதாவது ஓர் அனுபவத்துடன்தான் இருந்து வருகிறோம்.

எல்லா அனுபவங்களும் ஒன்றுபோல் இருப்பதில்லை. சில இன்பமாக உள்ளன; சில துன்பமாக உள்ளன. இன்ப அனுபவங்கள் எப்பொழுதும் நமக்குப் பிரச்சினையாக இருப்பதில்லை. இன்பம் ஏற்படும்போது

எல்லாமே நமக்குள் ஒழுங்குபட்டு விட்டதுபோல் நாம் நிம்மதியாகிவிடுகிறோம்; நம்மை மறந்துவிடுகிறோம்.

துன்பம் ஏற்படும்போதுதான் நாம் சுயநினைவுக்கு வருகிறோம். நம்மை விடுவித்துக் கொள்ளப் போராடுகிறோம்.

வெளிப்படையாகப் பார்க்கும்போது, துன்பம்தான் பிரச்சினைக்குறிய அம்சமாகத் தோன்றுகின்றது.

ஆனால் உண்மையில் இன்பந்தான் பிரச்சினைக்குரிய அம்சமாகும். இன்பத்தின்போதுதான் தேக்கநிலை ஏற்படுகின்றது. நமக்குள் ஏதோ ஒருபகுதி தன்னை மறந்து நின்றுவிடுகின்றது.

துன்பத்தைப்பொறுத்த அளவில்,

அதிலிருந்தும் விடுபடவேண்டுமென்ற எதிர்ச்செயல் ஏற்பட்டுவிடுகின்றது.

நமது அனுபவங்கள் அனைத்தும் சீரான ஆறாக ஓடவேண்டும். தேங்கி நிற்பதும் சரியல்ல; எதிர்த்திசையில் முரண்பட்டு ஓடுவதும் சரியல்ல.

ஆனால் அப்படி ஒரு நிகழ்வு நடந்துவிடுகின்றது.

நம்மையறியாமலேயே நமக்குள் ஏற்பட்டுவிடுகின்றது. நமது அன்றாட வாழ்வின் ஓர் அங்கமாகிவிடுகின்றது.

தென்தமிழ்நாட்டில் பொதிகை மலையில் பாவநாசம், காரையாறு நீர்த்தேக்கத்தை அடுத்து பாணதீர்த்தம் என்னும் அருவி உள்ளது. அருவிக்கு மேலே காட்டாறு ஒன்று உள்ளது. அந்த ஆறுதான் அருவியாக பலநூறு அடி உயரத்திலிருந்து விழுகிறது.

அந்தக் காட்டாற்றின் கரையோரமாக ஒருமுறை சாது ஒருவருடன், நானும் அன்பர்கள் சிலரும் நடந்து சென்றோம். ஆறு சீறிப்பாய்ந்து கொண்டிருந்தது. அந்த ஆற்றில் முன்தினந்தான் குட்டி யானை ஒன்று அடித்துச் செல்லப்பட்டுவிட்டதாக அந்த சாது கூறினார்.

அது மட்டுமல்லாமல் அந்த ஆற்றில் இறங்கிக் குளிப்போமா என எங்களுக்கு அழைப்பும் விடுத்தார். அந்த ஆற்றின் வேகத்திற்கு யானைக்குட்டியென்ன, பெரிய யானையே எம்மாத்திரம். அவர் விளையாட்டாக எங்களைக் கூப்பிடுகிறார் என நினைத்தோம். ஆனால் அவரோ இறங்கிக் குளிக்க இடத்தைத்தேட ஆரம்பித்துவிட்டார். இப்போது நாங்கள் அந்த சாதுவிடமிருந்து எப்படித் தப்பிச்செல்வது என சிந்திக்க ஆரம்பித்துவிட்டோம்.

அப்போதுதான் அவர் காட்டாற்றில் எவ்வாறு குளிப்பது என்பதைக் கற்றுக்கொடுத்தார். காட்டாறு பலவிதமான பாறைகளுக்கிடையே பாய்ந்தோடும்போது சில இடங்களில் இயற்கையாகவே எதிர்த்திசையில் நீரோட்டம் அமைந்துள்ளது. அந்தப்பகுதியில் மட்டும் நீரே தெப்பம்போல் குளிப்பதற்கு வசதியாக அமைந்துள்ளது. அந்த நீரோட்டம் கொஞ்சதூரம் வந்தவழியே திரும்பிச்சென்று, பிறகு பிரதானமான நீரோட்டத்தில் மீண்டும் கலந்துவிடுகின்றது.

இப்படி நமது அனுபவங்கள் அதுபோக்கில் ஆறாகப் போகும்போது சில இடங்களில் எதிர் ஓட்டமும் ஏற்படுவது இயற்கைதான்.

சில தினங்களுக்குமுன்னால் அன்பர் ஒருவர் கேட்டார் : "ஞானம் ஏற்படும்போது உங்களுக்கு என்ன விதமான அனுபவம் ஏற்பட்டது?"

ஞானத்தைப்பற்றிப் பலரிடமும் இப்படி ஒரு எதிர்பார்ப்பு உள்ளது - ஏதோ ஒரு வினோதமான அனுபவம் தொட்டுவிடும் என்று.

"எனக்கு எந்த அனுபவமும் ஏற்படவில்லை. அனுபவத்துக்குப் பதிலாக எனக்குள் ஒரு பெரிய ஓட்டை விழுந்துவிட்டது. எல்லா அனுபவங்களும் அந்த ஓட்டையினுள் விழுந்து மறைந்து கொண்டிருக்கின்றன. நான் எந்த அனுபவமாகவும் இல்லை. அந்த ஓட்டையாக மட்டுமே இருக்கிறேன்."

- இப்படி அவருக்குக் கூறினேன். அவர் அதனை எந்த அளவில் புரிந்துகொண்டாரோ தெரியவில்லை.

ஓட்டைப்பாத்திரத்தில் தண்ணீரை ஊற்றினால், தண்ணீர் அனைத்தும் ஒழுகிப் போய்விடும்.

ஆனால் தண்ணீருக்குப் பதில், தானியத்தைப் பாத்திரத்தில் கொட்டினோமென்றால்,

ஓட்டை ஓரளவு பெரிதாக இருந்தாலுங்கூட

தானியங்கள் சிக்கிக்கொண்டு ஓட்டையையே அடைத்துக்கொண்டுவிடும்.

தானியங்களுக்குப் பதில், தண்ணீர் இருக்குமாயின், துவாரத்தினுள் இப்படி அடைத்துக்கொள்ளாது.

திடப்பொருளை, திரவமாக மாற்றவேண்டுமா?

நமது அனுபவங்கள் அனைத்தும் ஆறாக ஓடி மறைந்துவிடவேண்டும்.

நமது மனோலயம் அனைத்தும் கலைந்துவிடவேண்டும். மனோலயம் கலைந்த நிலையைத்தான் பிரவாக நிலை என்று கூறுகிறோம்.

பிரவாக நிலை என்று ஒரு நிலை கிடையாது. அனுபவங்கள் அனைத்தும் ஓடி மறைவதைத்தான் பிரவாகம் எனக்குறிப்பிடுகிறோம்.

ஆற்றுநீர் ஆர்ப்பரித்து ஓடினாலும், ஏதோ ஓர் இடத்தில் எதிர்த்திசையில் திரும்புவதும் ஏற்பட்டுவிடுகிறது.

இங்கு நாம் என்ன செய்யவேண்டும்?

நித்திய அனுஷ்டானம் தேவைப்படுகிறதா?

அனுஷ்டானம் என்பது என்ன? அது எவ்வாறு செயல்படுகிறது?

நமக்கு ஏற்படும் அனைத்து உணர்வுகளையும் கவனித்தல் என்பது ஓர் அனுஷ்டானமாகக் கூறப்படுகிறது.

நமக்கு ஏற்படும் நான் என்னும் உணர்வை அமைதியாகக் கவனித்து வருதல் என்பது ஓர் அனுஷ்டானமாகக் கூறப்படுகிறது.

எல்லாவற்றுக்கும் ஆதாரமாக - எல்லாவற்றையும் தழுவி நிற்கும் ஓர் ஆழ்ந்த அமைதியை - Silenceஐ தொடர்ந்து கவனித்து வருதல் ஓர் அனுஷ்டானமாகக் கூறப்படுகிறது.

எனக்கு எந்த செயலும் கிடையாது; எல்லா செயல்களை இறைவனே இயக்குகிறான் என்ற மனநிலையில் நிகழ்வுகளைக் கவனித்து வருதல் ஓர் அனுஷ்டானமாகக் கூறப்படுகிறது.

இறைவன் என்ற பெயரில் நமது அடியாழத்திலுள்ள இருப்புணர்வைக் கவனித்து வருதல் ஓர் அனுஷ்டானமாகக் கூறப்படுகிறது.

இப்படிப் பலவிதமான அனுஷ்டானங்கள் கூறப்படுகின்றன.

அனுஷ்டானங்கள் என்ன செய்கின்றன?

ஆறு ஒன்று ஓடி வருகிறது. அது பலவாறாகச் சிதறி ஓடுகிறது. சிதறிச் சென்ற நீர் ஏதோ ஓர் இடத்தில் மீண்டும் ஒன்று சேர்ந்து ஓடுகின்றது. ஆற்று நீர் ஓடிச்செல்ல நாம் பாதையை அமைத்துக் கொடுத்தோமென்றால்,

ஆற்று நீர் சிதறி ஓடாது.

நமது அனுஷ்டானங்கள் இப்படித்தான் உதவுகிறது.

ஓடிவரும் அனுபவங்களுக்கு இந்த அனுஷ்டானங்கள் யாவும் ஒரு கால்வாயை அமைத்துக் கொடுக்கின்றன.

நமது அணுகுமுறையைப் புரிந்து கொண்டவர்கள் பலரும், ஏற்கனவே பல வகையான அனுஷ்டானங்களைச் செய்து முடித்தவர்களே.

ஏற்கனவே அனுஷ்டானங்கள் பலவற்றைக் கடந்து வந்தவர்களுக்குப் புதிதாக எந்த அனுஷ்டானங்களையும் எடுத்துச் செய்திடத் தேவையில்லை.

அவர்கள் அனுஷ்டானத்தில் ஈடுபடாவிட்டாலும்,

அவர்கள் ஏற்கனவே செய்த அனுஷ்டானங்கள் அவர்களையறியாமலேயே அவர்களைப் பின்பற்றி வரும்.

அவர்களாக முயன்று எந்த அனுஷ்டானத்திலும் ஈடுபடத்தேவையில்லை.

ஒருமுறை எனக்கு கம்ப்யூட்டரில் ஒரு பக்கம் அளவுக்கு டைப் செய்யவேண்டியது ஏற்பட்டது. அதை டைப் செய்வதே தியானமாகிவிட்டது. அந்த தியானம் கலைவதற்கு சிலமணிநேரம் ஆகிவிட்டது.

ஜே. கிருஷ்ணமூர்த்திக்கு சிலவேளைகளில் தியானநிலை ஏற்பட்டு, அது உடல் உபாதையை ஏற்படுத்தும் அளவுக்குச் சென்றுவிடும்.

அவருக்கு என்ன ஏற்பட்டது என்று எவராவது விசாரித்தால்கூட போதும், அவர் மீண்டும் அந்த நிலைக்குப் போய்விடுவார். அதனால் அவரிடம் பலரும் அந்த சந்தர்ப்பங்களில் ஜாக்கிரதையாகத்தான் நடந்துகொள்ள வேண்டியது இருந்தது.

தியான அனுஷ்டானங்களில் அதிகம் ஈடுபாடு இல்லாதவர்களுக்குத்தான் இத்தகைய நித்திய அனுஷ்டானங்கள் தேவைப்படுகின்றன.

நமது அணுகுமுறையில் நாம் ஒருபோதும் இத்தகைய அனுஷ்டானங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதாவிட்டாலும்

அனுஷ்டானங்களை அறவே புறகணித்துவிடவேண்டும் என்று ஆலோசனை வழங்குவதில்லை.

நித்திய அனுஷ்டானங்கள் தவறானவை அல்ல. அவை எந்த அளவுக்கு ஒருவருக்குத் தேவை என்பதை ஒவ்வொருவரும் அவருடைய தகுதிக்கேற்ப முடிவு செய்து கொள்ள வேண்டிய ஒன்றாகும்.

அகத்தளவில் நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதைப் புரிந்து கொள்வதுதான் ஒருவருக்கு நிரந்தரத் தீர்வாக அமையும்.

நித்திய அனுஷ்டானம் ஒருவருக்கு நல்லவிதமான சூழ்நிலையை - மனநிலையை உருவாக்கிக் கொடுக்கும்.

இதனால் நாம் நமது மனதை வெற்றிகரமாக நிர்வாகம் செய்கிறோம் என்ற ஓர் எண்ணமும் நமக்கு ஏற்பட வாய்ப்புள்ளது.

மனதைப் பொறுத்தவரையிலும், நாம் நமது இயலாமையைப் புரிந்து கொள்வது ஒன்றே நிரந்தரமான தீர்வை ஏற்படுத்தும்.

மனதைப் பொறுத்தவரை வெற்றி மட்டுமே நமது இலக்காக அமையும்போது அது தோல்வியில் தான் முடியும்.

மனதைப் பொறுத்த அளவில் தோல்விதான் இலக்காக அமையவேண்டும்.

வெற்றியின் வாசல் அப்படித்தான் அமைந்துள்ளது.

முடிவாக?

சகஜமான சில அனுஷ்டானங்களையும் பழகிப் பாருங்கள்.

அதனையும் கடந்து வாருங்கள்.



## திருவருட்சோலையில் சில...








# ஞான முகாம்

சேலம் பெரியகவுண்டபுரத்தில் கொடம்பகாடு பகுதியில் அமைந்துள்ள நமது திருவருட்சோலையில் ஆகஸ்ட் 15 முதல் 19 வரை ஞான முகாம் மிக சிறப்பான முறையில் நடைபெற்றது.

தமிழ்நாட்டின் அனைத்து பகுதியிலிருந்தும் மொத்தம் 75 அன்பர்கள் இதில் கலந்துகொண்டனர். பரபரப்பான வெவ்வேறு சூழ்நிலைகளில் இருந்து வந்திருந்த அனைவருக்கும் திருவருட்சோலையின் இயற்கை சூழல் ஓர் ஆழ்ந்த அமைதியையும், மகிழ்ச்சியையும் தருவதாக அமைந்திருந்தது.

வந்திருந்த அன்பர்களுக்கு அங்கேயே சிறப்பான முறையில் உணவு தயாரிக்கப்பட்டு வழங்கப்பட்டன. காலையிலும், மாலையிலும் தேனீரும், கீரை சாரமும் (Soup) வழங்கப்பட்டது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் முதல் இரண்டு நாட்களில் "நான் யார்?" மற்றும் "அகம்-புறம்" என்ற தலைப்புகளிலும் இறுதி நாளில் "புரிதலும், புரிதலில் உறுதியும் " (Understanding & Confirmation) என்ற தலைப்பிலும் சிறப்புரை ஆற்றினார்கள். இதற்கிடையே ஐயாவுடன் நிறைய கேள்வி - பதில் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கேள்வி-பதில் நிகழ்ச்சிகள் அன்பர்களின் சந்தேகங்கள் நீங்கி தெளிவுபெற பேருதவியாக இருந்தது.

மேலும் தேனி கம்பத்தைச் சேர்ந்த அக்கு ஹீலர் உமர் பாருக் அவர்கள் "உடலின் மொழி " என்ற தலைப்பில் அனைவருக்கும் விழிப்புணர்வு ஏற்படும் வகையில் 18-8-2013 அன்று மாலை 4 மணிஅளவில் சிறப்புரை ஆற்றினார்கள். அனைவருக்கும் பயனுள்ளதாக அமைந்தது.

மேலும் Falun Dafa என்ற சைனீஸ் வகையைச் சேர்ந்த தியான உடற்பயிற்சியை சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் உறுப்பினர் தியாகராஜர் குழுவினர் கற்றுக்கொடுத்தனர். இது மிகவும் புதுமையானதாகவும், எளிமையானதாகவும், பயனுள்ளதாகவும் இருந்தது.

இரவு நேரங்களில் அன்பர்கள் தங்களுக்குள் கலந்துரையாடல்களில் வெகுநேரம்வரை ஆர்வமாக ஈடுபட்டனர். இது அனைவருக்கும் சுவாரசியமாக அமைந்திருந்தது.

தினமும் விடியற்காலையில் 6-30 மணிக்கு தேனீர் முடிந்து அனைவரும் ஆர்வத்துடன் மலை ஏற்றத்தில் ஈடுபட்டனர். இது அனைவருக்கும் உற்சாகத்தை கொடுத்தது.

ஐயாவின் உரையாடல் மூங்கில் மர நிழலின் அடியில் இயற்கை எழில் சூழலில் அமைந்திருந்தது. திருவருட்சோலை மலைகளின் நடுவே நடந்த இந்த நிகழ்வு மனதை கொள்ளைகொள்ளும்விதமாக அமைந்திருந்தது.

இந்த ஞான முகாமில் பங்கேற்ற அனைவரும் தெளிவுடனும் மன நிறைவுடனும் திரும்பிசென்றது நமது முதல் முயற்சியின் சிறப்பை குறிக்கின்றது.

ஞானமுகாமின் சிறப்பிற்கு ஒத்துழைப்பு நல்கிய அனைத்து அன்பர்களுக்கும் பாராட்டுகளும், வாழ்த்துகளும்...

நன்றியுடன்,

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்

# உங்களுக்கென ஒரு கூடம்

சேலம் திருவருட்சோலையில் ஆகஸ்ட் 15 முதல் 19 வரை முதலாவது முகாம் நடைபெற்றது. விண்ணப்பித்திருந்த அனைவரும் கலந்துகொள்ள அழைக்கப்பட்டார்கள். இந்த முகாமில் கலந்துகொண்ட 75 பேர்களும் மிகவும் திருப்தியடைந்தார்கள். தங்குவதற்கான சிறிய கூடத்தை, பெரிய மனதுடன் அட்ஜஸ்ட் செய்து பயன்படுத்திகொண்டார்கள்.

பயனடைந்த அவர்கள் விடைபெறும்போது பயமுறுத்திவிட்டுப்போயிருக்கிறார்கள், அடுத்தமுறை இன்னும் பலரைக் கூட்டிவருவோமென்று. இந்த முறை சோலையிலுள்ள கூடம் ஆண்களுக்கு மட்டுமே போதுமானதாகியிருந்தது. பெண்கள் தங்க பக்கத்துத் தோட்டத்தில் ஏற்பாடு செய்யவேண்டியதாகிவிட்டது.

இனிவரும் ஒவ்வொரு முகாமிற்கும் 100 நபர்களையும் தாண்டி வந்திடும் நிலை ஏற்பட்டுள்ளது. மிஷன் சார்பில் நடைபெறும் ஞானமுகாம் அனைத்திற்கும் தற்போதுள்ள கட்டிடங்களைப் பயன்படுத்தவும். புதியதாக ஒரு கூடம் அமைத்துக்கொள்ளவும், திருவருட்சோலை உறுப்பினர்கள் அனுமதி வழங்கியுள்ளார்கள். இப்போதுள்ள கட்டிடமும், கழிவறைகளும் பெண்களுக்கு மட்டுமே போதுமானதாக உள்ளது.

ஆண்கள் தங்குவதற்கும் கூடம் நடத்துவதற்கும் 100 x 30 அடி அளவுகள் கொண்ட கொட்டகை ஒன்றை ஞான மந்திர் என்ற பெயரில் அமைக்க முடிவு செய்துள்ளோம். அதற்கு பத்து இலட்சம் ரூபாய் வரை செலவு ஆகும் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

உங்களுக்காண இந்தக் கூடம் உங்களாலேயே உருவாக வேண்டும் என விரும்புகின்றோம். ஊர்கூடித் தேர் இழுப்போம். ஞானமந்திர் கட்டிட நிதிக்கு நமது பங்களிப்பைச் செலுத்த, ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் என்ற கணக்கில் நன்கொடை வழங்குமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

A/c Name : Sri Bagavath Mission
Bank : HDFC A/c. No. 15907620000075 IFSC : HDFC0001590

தலைவர்,
ஸ்ரீ பகவத் மிஷன்

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் பகவத் ஐயாவின் புத்தகம் மூலமாக நல்ல முறையில் மனதின் இயக்கத்தைப் பற்றி புரிந்து கொண்டேன். மனதின் இயக்கத்தை எதிர்த்து செயல்படுவது இல்லை. இந்தப் புரிதலுக்கு முன்பு, நான் செய்யும் சில தவறுகளுக்காக மிகவும் வருத்தப்படுவேன். குற்ற உணர்ச்சிகள் என்னை மிகவும் வாட்டி எடுக்கும். ஆனால் இப்போது பழையப் பழக்கத்தின்படி சில நேரங்களில் எனக்குத் தெரிந்தே தவறுகள் செய்துவிடுகிறேன். ஆனால் பழையபடி அவ்வளவாக குற்ற உணர்ச்சி ஏற்படுவதில்லை. புரிதலுக்கு முன்பு தவறுகள் செய்த நிலையை காட்டிலும் இப்போது நல்ல முன்னேற்றத்தில்தான் இருக்கிறேன். குற்ற உணர்ச்சி முன்புபோல் ஏற்படாததால் துணிந்து தவறு செய்துவிடுகிறேனோ என்று தோன்றுகிறது. நான் செல்லும் பாதை சரிதானா? விளக்கம் தேவை.

பதில் : பகவத் ஐயாவின் புத்தகம் வழியாக மனதின் இயக்கத்தைப் பற்றிய புதிய அணுகுமுறையை நன்கு புரிந்துகொண்டமைக்கு மிக்க நன்றி. உங்கள் கேள்வியின்மூலம் நீங்கள் உங்களுடைய பழைய நிலையிலிருந்து நல்ல நிலைக்கு முன்னேற்றம் அடைந்திருப்பது நன்றாக தெரிகிறது.

பொதுவாக ஒரு செயல் நடைபெறும் போது அதில் மூன்று பகுதிகள் சேர்ந்துதான் இருக்கும். அதாவது எண்ணம், சிந்தனை, செயல் என்ற அடிப்படையில் தான் ஒரு செயல் உருவாகிறது. ஒரு எண்ணம் தோன்றிய பிறகு அதை பற்றிய நமது மனதில் பதிந்துள்ள பழைய அனுபவங்களின் பதிவுகளுக்கு ஏற்றபடி நமது சிந்தனையை கொண்டு சிந்திக்கத் தொடங்குகிறோம். பழைய அனுபவங்களின் நினைவும். பழைய பழக்கமும் நம்மை பழையபடி அதே செயலை செய்ய தூண்டுகிறது. நமது அறிவின் வழிகாட்டுதலையும் மீறி நாம் அதே செயலை செய்துவிடுகிறோம். பிறகு குற்ற உணர்ச்சியில் வாடுகிறோம். எப்போது தான் நாம் இதிலிருந்து விடுப்பட்டு நாம் விரும்பியபடி நல்ல செயலை செய்து நிறைவாக வாழ்வது என நம்மை நாமே நொந்துகொள்கிறோம். பகவத் ஐயாவின் மனதை பற்றிய புதிய அணுகுமுறை தெரிவதற்கு முன்பு நாம் இப்படித்தான் இருந்தோம்.

பகவத் ஐயாவின் மனதை பற்றிய புதிய அணுகுமுறையை புரிந்துகொண்ட பிறகு மனதில் எண்ணம் தாமாக தோன்றுகிறது. அப்படி தோன்றுவது நமது கட்டுபாட்டிலும் இல்லை. எண்ணம் தோன்றி மறையும் நிலையில் தான் நமக்கு இப்படி ஓர் எண்ணம் தோன்றியுள்ளது என்பதை நம்மால் அறிய முடிகிறது.

மனதின் கவனத்திற்கு வராத நிலையில் ஏற்படும் எண்ணம், சிந்தனை, செயல் என்ற தொடரில் எந்த நிலையிலிருந்தாலும் அதற்கு நாம் பொறுப்பு ஏற்கவேண்டிய அவசியமில்லை. ஏன் எனில் நமது மனதின் கவனத்திற்கு வராத எதற்கும் நாம் எப்படி பொறுப்பு ஏற்கமுடியும்?

எண்ணம், சிந்தனை, செயல் என்ற தொடரில் எங்கு, எப்போது, எந்த நிலையில் நம்மால் அடையாளம் காணமுடிகிறதோ அதற்குப் பிறகு நாமாக சிந்திப்பதற்கும், செயல்படுவதற்கும் நாம் மட்டுமே பொறுப்பு. நம்முடைய பழைய அனுபவங்களின் நினைவும், பழக்கப்பதிவும் நம்மை பழைய செயலுக்குத்தான் இழுக்கும். எப்படித்தான் நம்மை பழைய செயலுக்கு இழுத்தாலும் இந்தப் புரிதலுக்கு, முன்பு நம்மை பாதிக்கும் அந்த செயல், நடந்துவிடக்கூடாது என்ற போராட்ட உணர்வு மட்டுமே மனதில் முழுமையாக இருந்து கொண்டே இருக்கும். இந்த போராட்ட உணர்வே அந்த செயலுக்கு மறைமுக உணர்வுத் தூண்டுகோலாக அமைந்து அந்தத் தவறான செயலை நம்முடைய கட்டுப்பாட்டையும் மீறி செயல்பட வைத்துவிடுகிறது.

ஆனால் இந்த புரிதலுக்கு பிறகு எண்ணம், சிந்தனை, செயல் என்ற தொடரில் எந்த நிலையில் நமது மனதின் கவனத்திற்கு வருகிறதோ அதற்குப் பிறகு அந்த தவறான செயல் என்பது நமக்கு நன்கு தெரிந்த நிலையில் நம்முடைய முழுமையான ஒத்துழைப்புடன் மட்டுமே நடக்கிறது. இங்கு நமக்கு தெரியாமல் நடந்துவிட்டது என கூறுவதற்கு வாய்ப்பே இல்லை. நமக்கு நன்கு தெரிந்து நம்முடைய முழுவிருப்பத்துடன் இங்கு தவறு நடைபெறுகிறது.

புரிந்து கொண்ட நமக்கு தவறான செயல் நடக்கவே நடக்காது என்று கூறுவதைவிட நமக்கு நன்கு தெரிந்தநிலையில் போராட்டம் இல்லாமல் சில நேரங்களில் தவறான செயல் நடைபெறுகிறது. முன்புபோல் போராட்டமும், குற்ற உணர்ச்சியும் இல்லை. உங்களையே நீங்கள் ஆராய்ந்து பார்த்தீர்களானால் முன்பு போராட்டமும், குற்ற உணர்ச்சியும் அடிக்கடி தோன்றி தவறான செயலில் ஈடுபட்டுகொண்டிருந்த நாம் இப்போது விழிப்புடனும் போராட்டமின்றி செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். இப்படி போராட்டமின்றி செயல் நடைபெறுவதால் அந்த தவறான செயல் நடைபெறும் அளவு குறையத் தொடங்குகிறது.

உதாரணமாக முன்பு ஒரு மாதத்திற்கு 10 முறை தவறு செய்து வருத்தப்படுகிறோம் என்றால் இப்போது நமக்கு நன்கு தெரிந்து செயல்படும்போது தவறுகளின் எண்ணிக்கை 9,8,7,6,5 என குறையத்தொடங்கும். சிலகாலங்களில் அந்த செயலின் மீதான ஈர்ப்பு குறையத்தொடங்கும். பிறகு எண்ணம், சிந்தனை, செயல் என்ற தொடரில் முதலில் தேவையற்ற செயல் குறைந்து, பிறகு நாமாக கையில் எடுத்து சிந்திக்கும் சிந்தனை குறைந்து இறுதியாக சில காலத்தில் எண்ணம் மனதின் கவனத்திற்கு வந்த நிலையிலே நம்மால் உணர்ந்து கொள்ளக்கூடிய தன்மைக்கு நாம் உயர்ந்துவிடுகிறோம்.

இதில் புரிதலுக்கு முன் ஒருவர் செய்த தவறான செயலின் தீவிரத்தை பொறுத்து மாற்றம் கொஞ்சம், கொஞ்சமாகத் தான் நிகழமுடியும்.

ஏன் எனில், அந்தச் செயலின் தீவிரம் அந்த அளவிற்கு மனதில் பதிந்துள்ளதே காரணம். எப்படி தான் இருந்தபோதும் நம்முடைய கவனத்திற்கு வந்தபிறகு நிச்சயம் இந்த தவறான செயலை செய்யமாட்டேன் என்று உறுதிப்பாடு இருக்கும் பட்சத்தில் நிச்சயமாக தவறான செயல் நடைபெறுவதில்லை. ஆனால் நம்முடைய உறுதியை நாமே குறைத்து செயலின் மீது விருப்பம் கொள்வோம் எனில் தவறான செயல் தடுக்க முடியாத ஒன்றாகிவிடும்.

செயல் என்பது புறம். அகம் கிடையாது என்பதால் நாம் தான் நம்முடைய செயலை நல்ல செயலாக தீர்மானித்து செய்யவேண்டும்.

நம்முடைய தவறான செயலை மாற்றுவதற்கான என்னென்ன நல்ல வழிமுறைகள் உள்ளன என்பதை ஆராய்ந்து நாமாகக் கையில் எடுத்து செயல்படுவதன் மூலம் நிச்சயமாக நம்முடைய தவறான செயலின் அளவு குறைந்து மேலும் அந்தச்செயலே தேவையே இல்லாமல் போகும் நிலைக்கு உயர்ந்துவிடுவோம்.

நம்முடைய செயலை முயற்சி செய்து மட்டுமே மாற்றமுடியும். மேலும் நாம் ஈடுபடும் ஒவ்வொரு சிறுசிறுச் செயலையும்கூட முழு விசுவாசத்துடனும் அக்கரையுடனும் செயல்படுவோமாயின் காலப்போக்கில் நமது அனைத்து செயல்களிலும் ஒரு நேர்த்தியும் முழுமையையும் அமைந்துவிடும்.

நீங்கள் செல்லும் பாதை மேலும் சிறப்பாக அமைய நீங்கள் செய்யவேண்டியது உங்களுடைய வளர்ச்சிக்கான முழுமையான புறமுயற்சி மட்டுமே.

அக அமைதிக்கு நாமாக ஏற்படுத்தும் முயற்சி பயனற்றது.

புற வளர்ச்சிக்கு நாமாக ஏற்படுத்தும் முயற்சி பயனுடையது.

V.A.P. சரவணன்,
சேலம்
செல் : 99942-05880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் "தன்னை அறியும் ஞானம்" என்ற தலைப்பில் 3-8-2013 அன்று சென்னை நங்கநல்லூர் பகுதியிலும் 4-8-2013 அன்று சென்னை அடையார் பகுதியிலும் சிறப்புரை ஆற்றினார்கள். பல புதிய அன்பர்கள் கலந்து பயனடைந்தனர்.

பல ஆண்டுகளாக ஆன்மீகத்தில் பயிற்சி முயற்சி செய்து உண்மையைத் தேடும் அன்பர்கள் முதற்கொண்டு ஆரம்ப சாதகர்கள் வரை அனைவருமே ஞானம் பெற எளிய வழியை புரிதலின் மூலம் வழங்கி வருகிறார் நமது பகவத் ஐயா அவர்கள்.

உண்மை என்பது எப்பொழுதும் எளிமையாகத்தான் உள்ளது. நாம் அதை திறந்த மனதுடன் அணுகாததாலும், தேவையற்ற கற்பனையாலுமே தவறவிட்டுவிடுகின்றோம்.

விடுதலை (முக்தி) என்பது இயற்கையில் அனைத்து உயிரினங்களின் பிறப்பியல்பு. இருப்பினும் மனிதனின் சிந்தனையாற்றல் பகுதியில் குழந்தை பருவத்தைக் கடந்த நிலையில் சிக்கலுக்கு ஆளாகின்றான். பிறகு இதே சிந்தனை ஆற்றலை பயன்படுத்தி மனத்தின் இயலாமையைப் புரிந்து கொள்ளும்போது இழந்த விடுதலையை மீண்டும் பெறுகின்றான். எனவே மனிதனாக பிறந்த அனைவருக்குமே இந்தப் புரிதல் தேவையான ஒன்று.

இந்தப் புரிதல் ஒன்றே வாழ்வை உண்மையாக துய்த்து வாழ உதவிசெய்யும். முழுமையான வாழ்வு என்பதே இந்த புரிதலுக்குப் பின்பே தொடங்குகிறது.

இதுவரை வந்த எத்தனையோ மகான்களும் ஞானிகளும் விடுதலைக்கான (முக்தி) வழிகள் பல சொன்னாலும், இதனால் பலன் அடைந்தவர்கள் வெகு சிலரே. ஆனால் நமது பகவத் ஐயா அவர்களின் சரியான அணுகுமுறையில் பலன் பெற்றவர்கள், பலன் பெற்றதோடு அல்லாமல் மேலும் பலருக்கு இப்புரிதலை கொடுக்கும் தகுதியையும் பெற்றுவிடுகிறார்கள்.

இதுவே இப்புரிதலின் தனிச்சிறப்பு.

எனவே இப்புரிதலை அனைவருக்கும் கொண்டுசெல்வோம். புரிந்தவர்கள் மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்வோம்.

அன்புடன்,

K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஜென் கதை

# புத்த நிலை

அவர் ஒரு மகா குரு. நூல்களையும், சூத்திரங்களையும் கரைத்துக் குடித்தவர். பெரிய வித்வான்களையெல்லாம் தோற்கடித்து மகா குரு எனப் பெயர் பெற்றவர்.

எப்போதும் அவரைக் காண மக்கள் வெள்ளம் திரண்டிருக்கும். அவர் சென்ற இடங்களிலெல்லாம் அவர் பேச்சைக் கேட்க கூட்டம் கூடும். அவரது தத்துவங்களையும் போதனைகளையும் கேட்டு மக்கள் புல்லரித்துப் போவார்கள். அவர் சென்ற பின்பும் பல நாட்கள் அவரை பற்றியே பேசிக் கொண்டிருப்பார்கள்.

அவர் தமது மார்க்கத்திற்கு மக்களைக் கூட்டம் கூட்டமாக ஈர்த்தார். 'பற்றுகளை துறந்துவிடு; பந்தங்களை வேரோடு கிள்ளி எறிந்து விடு; ஆசையே சலனங்களுக்கு எல்லாம் காரணம். ஆசையை எரித்த மனதில் ஞான சூரியன் சுடர் விடும்!' என்று தான் சென்ற எல்லா இடங்களிலும் போதித்தார் அவர். இடைவிடாமல் வழிபாடு செய்து கொண்டேயிருந்து வழிபடும் முறைகளையும் மக்களுக்குக் கற்பித்தார்.

ஒருமுறை அவர் ஒரு கப்பலில் பயணம் செய்தார். பயணத்தின் சில நாட்களிலேயே கப்பலில் உள்ள அனைவரும் அவரது சீடர்களாகி விட்டனர். அவரது போதனைகளால் 'புத்தம் சரணம் கச்சாமி' என்ற குரல் இடைவிடாது அந்தக் கப்பலில் கேட்க ஆரம்பித்தது.

ஒருநாள் அதிகாலை நேரத்தில் கப்பலில் இருந்து பார்த்தபோது அவர் கண்ணுக்கு ஒரு திட்டு தூரத்தில் இருப்பது தென்பட்டது. கப்பலின் தலைவனை அழைத்த குரு அதனைச் சுட்டிக்காட்டினார்.

"அது ஒரு சிறு தீவு சாமி. கடலில் மூழ்கிய ஒரு மலையின் மேற்பகுதி!" என்றான் கப்பலின் தலைவன்.

"அங்கு யார் வசிக்கிறார்கள்?"

"அங்கு மக்கள் யாரும் கிடையாது மகாகுரு. யாரோ மூன்று துறவிகள் அந்த ஆளில்லாத் தீவில் வசிக்கிறார்கள்".

"என்ன துறவிகளா?" வியப்புடன் கேட்டார் மகாகுரு.

"ஆமாம் சுவாமி. அங்கு ஓரிரு இலந்தை மரங்கள் தான் இருக்கின்றன. இவர்கள் எப்படித்தான் அங்கு இருக்கிறார்களோ?"

"கப்பலை அந்தத் தீவுக்குச் செலுத்து!" என்றார் மகா குரு. கப்பலின் தலைவன் தயங்கினான்.

"ஒன்று செய். கப்பலை இங்கேயே நிறுத்து ஒரு படகில் நான் மட்டும் அங்கு போய் வருகிறேன். அவர்கள் துறவிகள் என்றாயே! அவசியம் நான் அவர்களைக் காணவேண்டும். அவர்கள் எந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் என்றறிய வேண்டும். அவர்கள் பண்டிதர்களானால், அவர்களுடன் வாதிடுவேன். பாமரர்களானால் அவர்களுக்கு என் கருத்துகளை போதிப்பேன். எது எப்படியாகினும் இன்று மாலைக்குள் திரும்பி விடுவேன். நான் திரும்பி வரும்போது பௌத்த மார்க்கத்திற்கு புதிதாக மூவர் இணைந்திருப்பார்கள்!" என்றார் மகாகுரு மிகுந்த நம்பிக்கையுடன்.

படகு ஒன்று அவரைச் சுமந்து கொண்டு தீவை நோக்கிச் சற்று நேரத்தில் கிளம்பியது. மகாகுரு கரையிறங்கி விடுவிடுவென்று நடந்து சென்றார். அவர் அதிகம் அலையத் தேவையிருக்கவில்லை. சற்றுத் தூரத்தில் மரங்களின் நிழலில் சிறு ஓலைக்குடில் ஒன்று காணப்பட்டது. சத்தம் கேட்டு அதிலிருந்து மூன்று பேர் வெளியே வந்து அவரை மவுனமாக நோக்கினார்கள்.

மூவரும் வயோதிகர்களாயிருந்தனர். சாதாரண ஆடையில் அவர்கள் எளிமையாக இருந்தார்கள். அந்த மூவரும் குருவை வணங்கினர். குருவும் பதிலுக்கு வணக்கம் தெரிவித்தார்.

"நீங்கள் துறவிகளா?" குரு கேட்டார்.

"இல்லை ஐயா!" என்றார் அவர்களில் ஒருவர். "இல்லையா?" வியப்புடன் வந்தது குருவின் கேள்வி.

"துறப்பதற்கு எங்களிடம் என்ன இருக்கிறது? நாங்கள் எதைத் துறப்பது? எதனிடமிருந்து துறப்பது?" என்றார் அவர்.

"நீங்கள் எந்த மதம்?" இது குருவின் இரண்டாவது கேள்வி.

"மதமா? அப்படியென்றால் ...? "நீங்கள் யாரை வழிபடுகிறீர்கள்?"

"வழிபாடா?" என்று இழுத்த மூவரில் ஒருவர்,

"நீங்கள்....?" என்று இழுத்தார்.

"நான் பௌத்த மதத்தைச் சார்ந்தவன். புத்தர் பெருமானின் பாதக் கமலங்களை வணங்குபவன்."

"ஓ! புத்தரா? அவர் வணக்கத்திற்கு உகந்தவர்தான். நாங்களும் அவரை வணங்குவோம்."

"எப்படி வணங்குவீர்கள்?" அழுத்தமாகக் கேட்டார் குரு.

"எப்படியென்றால்...?"

"உங்கள் வழிபாட்டு முறை என்ன?"

"வழிபாட்டு முறை, வழிபடும் நேரம் என்று எல்லாம் ஏதும் எங்களுக்குக் கிடையாது. எப்போது தோன்றினாலும் மனதுக்குள் பிரார்த்திப்போம். பூமியைப் படைத்தவனுக்கு நமஸ்காரங்கள். புத்தருக்கு நமஸ்காரங்கள். புத்தருக்கு முன்னும், பின்னும் உலகின் துயரங்களுக்கு விடிவு காண முயன்ற அனைவருக்கும் நமஸ்காரங்கள்! அவ்வளவுதான் எங்கள் பிரார்த்தனை. பிறகு எங்கள் வேலையைப் பார்க்க ஆரம்பித்து விடுவோம்.

சிரித்தார் மகா குரு. "முறை அது அல்ல. எல்லாவற்றிற்கும் ஒரு முறை உண்டு. நியதி உண்டு. அதுபோலவே வழிபடுவதற்கும் முறை உண்டு. அதை நான் உங்களுக்குச் சொல்லித் தருகிறேன், வாருங்கள்!" என்று அவர்களை அன்புடன் அழைத்தார்.

மூவரும் ஆவலாக அவரைச் சூழ்ந்து கொண்டனர். மகாகுரு ஆரம்பித்தார். வைர சூத்திரங்கள், ஸ்தோத்திரங்கள், பாடல்கள் என எல்லாவற்றையும் அவர்களுக்கு விளக்கினார். வழிபாட்டுத் துதியைச் சொல்லிகொடுத்துவிட்டு திரும்ப ஒப்பிக்கும்படி சொன்னார். அவர்கள் திணறவே மறுபடியும், மறுபடியும் விடாமல் அதை அவர்களுக்குச் சொல்லி கொடுத்தார். அவர்கள் கற்றுக்கொல்வதற்குள் மாலையாகி இருட்டத் தொடங்கிவிட்டது.

மகாகுரு அங்கிருந்து கிளம்பினார். அவரது மனதில் இப்போது பெருமிதம் குடி கொண்டிருந்தது. வகையறியா மூடர் மூவரை நல்லபடி கரை சேர்த்துவிட்டோம் என்று சந்தோஷத்தால் அவர் மனம் நிறைந்திருந்தது.

படகு திரும்பவும் அவரைச் சுமந்து கொண்டு கப்பலில் சேர்ந்ததும், நங்கூரம் எடுக்கப்பட்டது. கப்பல் கிளம்ப போகும்போது காற்றில் ஏதோ ஓசை கேட்டது.

மகாகுரு இருளில் உற்று நோக்கினார். தண்ணீரில் எதோ சலசல என்று சப்தம் கேட்டது. கூடவே யாரோ கூப்பிடும் குரலும் கேட்டது.

தீவிலிருந்த அந்த மூவரும் கடலில் மீது நடந்தவாறு ஓடிவந்து கொண்டிருந்தார்கள். கப்பலின் பக்கத்தில் வந்ததும், "சாமி! சாமி! நீங்கள் சொன்னது மறந்து போச்சு. தயவு செய்து மன்னிச்சிக்குங்க. இன்னொரு தடவை சொல்லிக் கொடுங்க" என்றனர்.

மகாகுருவின் கண்களில் கரகரவென்று நீர் வழிந்தது.

உங்களின் இயல்பான தன்மையே மனதில் எதையும் பிடித்து வைக்காத "மனோநாச நிலையில்தான் இருக்கிறீர்கள்" அதனால் உங்களின் வழிபாடு எதுவோ அதையே செய்யுங்கள். ஏன் எனில் அதைத்தான் புத்தபிரான் விரும்புகிறார். அதில் எளிமை உள்ளது. அவர் நேசிப்பதும் அதையேதான்."

"நீங்கள்தான் என்னை மன்னிக்க வேண்டும்" என்றார் மகாகுரு

மகாகுரு மௌனமானார்.

"அகமௌனமே புத்தநிலை"



**Book packet** containing printed books

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.